# காலப்படை பற்றிய குற்றப்பத்திரம்

நெடு நாள்களுக்கு முன்பு நான் இந்த வேலையை ஏற்றுக் கொண்டபோது, இது போன்ற ஒரு குற்றப் பத்திரத்தைப் பின்னாளில் நான் எழுத வேண்டியது வரும் என ஒருபோதும் நினைத்ததில்லை. இந்த இருபது வருடங்களாக எனக்கு ஏற்பட்ட நிகழ்ச்சிகளையும் தொல்லைகளையும் மனதில் கொண்டே நான் இந்தக் குற்றப் பத்திரத்தைத் தயாரித்து உள்ளேன். இதை நான் யாரிடம் சமர்ப்பிப்பது என இன்னமும் முடிவு செய்யவில்லை. எனக்குத் தெரிந்த சிலரிடம் நேரிலும், கடிதத்திலும் இதைப் பற்றி எழுதியபோதெல்லாம் அவர்கள் இதை என் கற்பனையின் குழந்தை எனக் கிண்டல் செய்தார்கள். ஒரு முறை நான் இதைப் பற்றி நம் நாட்டின் முதல் பிரஜையானவருக்கே கடிதம் எழுதி உள்ளேன். அவரிடமிருந்து கையெழுத்திட்ட புகைப்படம்தான் எனக்குப் பதிலாக வந்தது. இந்தப் புகைப்படத்தைக் கூடப் பத்திரப்படுத்தி வைக்க முடியவில்லை. அலுவலக மேஜையில் வைத்த இதுவும் காணாமல் போய்விட்டது.

நான் 1956 ஆம் ஆண்டு என் இருபதாம் வயதில் அரசாங்க ஆவணக் காப்பகத்தின் சேமிப்பு அறைக்கு உதவியாளனாக வர நேர்ந்தது. அந்த அலுவலகம் சிவப்பு நிறச் செங்கல் கட்டடத்தின் பின் பகுதி. வலையிடப்பட்ட ஜன்னல்கள். புழுக்கமும் புத்தகக் கட்டுகளிலிருந்து வரும் ஒரு வித வாடையும் நிரம்பிய அறைகள். பழைய ஓலைச் சுவடிகள். நீட்டெழுத்துக் கடிதங்கள். பாதி பாதியாய் உதிர்ந்துபோன கடிதங்கள். இந்தக் கட்டடம் முழுமையுமே எட்டுக் கால் பூச்சிகள் நிறைந்துபோய் உள்ளன. சில எட்டுக் கால் பூச்சிகள் அசாதாரணமான சைஸில் இருந்தன. அவற்றின் எட்டுக் கண்களும் சுழன்று திரும்பிக்கொண்டிருந்தன. கட்டடத்தின் தரைகளில் பிசுபிசுப்பும் கறுப்பும் எப்போதும்

ஒழுகிக்கொண்டே இருந்தன. ஆட்கள் எவரும் இந்த ஆவணங் களைப் பார்க்க வருவதில்லை. எப்போதாவது சிலர் கடிதம் மூலம் விவரங்கள் கேட்டு எழுதுவார்கள். சாவகாசமாகத் தேடி பதில் அனுப்பலாம். என்னைத் தவிர ஒரு பெண்ணும் அந்த அலுவலகத்தில் வேலை பார்த்தாள் எனக் கேள்வி. அவள் மேஜை கட்டடத்தின் பின்அறையில் கிடக்கும். அந்தப் பகுதியில் பகலில் நல்ல வெயில் வரும். நிழல் போல அவள் அலைந்து கொண்டி ருப்பாள். அவள் எந்த விதத்திலும் என்னோடு பேசியதில்லை. ஜன்னல்கள் இல்லாத அறைகளாக நான்கு அறைகள் இருந்தன. அதற்குள் நிறைய ஆவணங்கள் குவிக்கப்பட்டிருந்தன. நான்கு அறைகளையும் இணைக்கும் பெரிய ஹால் ஒன்றில் எருதுத் தலைகள் மாட்டி வைக்கப்பட்டிருந்தன. நான் அலுவலகத்தில் சேர்ந்த சில மாதங்களிலே மணம் செய்துகொண்டேன். அழகான பெண். பகலில் படிக்க அவள் ஏதாவது புஸ்தகங்கள் வேண்டு மெனக் கேட்டபோது, அலுவலக ஆவணங்களில் சிலவற்றை வீட்டுக்கு எடுத்து வந்து படிக்கக் கொடுத்தேன். அவள் அதை யெல்லாம் பகலில் படித்திருக்கக் கூடும். அவள் கொஞ்சம் கொஞ்சமாக மாறிக் கொண்டு வந்தாள். அந்த ஆவணங்களைத் திருப்பிக் கொடுக்க வேண்டுமென நான் கேட்டபோது எரித்து விட்டதாகச் சொன்னாள். அவள் அதன்பின் என்னைப் பார்க்கும் போதும். பேசும்போதும் அலட்சியமாக நடந்துகொள்ளத் தொடங்கினாள்.

ஒரு நாள் இரவில் படுக்கையில் சண்டையிட்டபோது அவள் என்னை எதிர்த்துக் கூச்சலிட்டுச் சொன்னாள்:

'உன் மூதாதையர்கள் ராணிக்கு வெந்நீர் போட்டுக் கொடுத்த அற்பர்கள்'

'எப்படித் தெரியும் உனக்கு?'

'எல்லாவற்றிற்கும் ஆவணங்கள் இருக்கின்றன'

நான் திடுக்கிட்டுப் போனேன். என் மூதாதையர்கள் பற்றிய விவரங்கள் எதுவும் தெரியாத எனக்கு அவர்கள் அரண்மனை அந்தப்புரங்களுக்கு வெந்நீர் போடுபவர்களாக இருந்திருக்க இயலாது எனத் திட்டமாகச் சொல்ல முடியவில்லை. நான் ஆவண அறையிலே அதன் பின்நாள்களில் தங்க நேர்ந்தது. நிறைய ஆவணங்கள் இருந்தன. பகலில் படித்தபடியிருந்தேன்.

இப்ராஹிம் லோடி, முகம்மது கோரியின் கடிதங்கள், ராபர்ட் கிளைவின் வளைந்த கையெழுத்துகள், வியாபார சம்பந்தமான எழுத்துகள், குதிரைப் படையின் வரவு செலவுக் கணக்குகள், ராணிக்குப் பன்னீர் வாங்க ஆள் அனுப்பிய விவரங்கள், தொப்பி வாங்க அலைந்தவர்கள் சமர்ப்பித்த விவரங்கள். எனக்கு தலை சுற்றத் தொடங்கியது. நிசப்தத்தில் வரிகள் மெல்ல அமிழ்ந்து ஆட்கள் வெளிவரத் தொடங்கினார்கள். கடிதங்களில் சண்டையிட்டுக்கொள்ளத் தொடங்கினார்கள். லோடியின் உருது மொழி திருகித் திருகிச் சுழன்றது. முகம்மது கோரி சதாவும் சண்டைக்காகக் கத்தியைச் சாணை தீட்டிக்கொண்டிருந்தான். கத்தி முனை என் கழுத்து வரை வந்துபோனது.

அந்த அரச ரூபங்களின் சாயைகள் அறைகளில் நிரம்பத் தொடங்கின. நான் வீடு திரும்பும்போது கூட அந்தச் சாயைகள் சில என்னோடே வந்தன. நான் அவற்றைக் கண்டு பயந்து தப்பி அலைந்தேன். நிச்சயமாகச் சொல்ல முடியும். நான் சாப்பிடும் போது இப்ராஹிம் லோடி பார்த்துக்கொண்டேயிருக்கிறான். என் தண்ணீர் டம்ளரின் விளிம்பு வரை அவன் விரல் படிந்து வருவதைப் பார்க்க முடிகிறது. பளபளப்பான உடை. கள்ளம் நிரம்பிய கண்கள். என் மனைவி என்னைப் பார்த்தபடியே அழுகிறாள். நான் சில நாள்கள் படித்த ஆவணங்களில் என் மூதாதையரில் சிலர் பல்லக்கு தூக்கினார்கள். சிலர் குதிரைக்குக் கொள்ளு வாங்கக் கையில் ஈட்டியோடு ஊர் ஊராகப் போய்க் கொண்டிருந்தார்கள். சிலர் அரண்மனையில் கீரைப் பாத்தி போட்டுக் கொடுத்தார்கள். அவர்களில் இருவர் அரண்மனைத் தோட்டத்தின் மூலையில் நின்று ரகசியமாகப் பேசிக் கொண்டார்கள். அது ஏதாவது ஒரு சதித் திட்டத்தின் ஆதாரமாகத் தான் இருக்கக் கூடும். அவர்கள் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டுச் சொன்னார்கள். ஒருவன் வேகமாகப் போய் அரசர் போகும் பல்லக்கின் அடியில் கருந்தேளைப் போட்டுவிட்டு வந்தான்.

துரோகம்.

சக துரோகி.

மற்ற விவரங்கள் ஆவணத்தில் கிடைக்கவில்லை. சக துரோகி களான என் முன்னோர்கள் கருப்பாகவும், உயரமாகவும் இருந்தார்கள். கண்கள் பெரியதாகவும், கட்டை மீசைகளோடும் அலைந்தார்கள். ஆவணக் காப்பகங்களுக்கு இரவில் திக்காக

இருட்டு வருகிறது. கரைக்க முடியாத இருட்டு, ஜன்னல்கள் அற்ற அறைகளில் விளக்குமில்லை. மெழுகுவர்த்தி வெளிச் சத்தில் நான் மூதாதையரைத் தேடிப் படித்துக்கொண்டிருந்தேன். பல தலைமுறையாக ராணிகளுக்கு வெந்நீர் போட்டுக் குளிக்க ரெடி பண்ணிக்கொண்டிருந்தார்கள். ராணிகள் உப்பரிகைகளில் ஈரத் தலையை உலர்த்துகிறார்கள். சாம்பிராணிப் புகை பரவுகிறது. ராணிகளுக்கு மிதமான சூட்டில் வெந்நீர் போடும் ஆட்கள் அடுத்த அண்டாக்களில் தண்ணீர் ஊற்றி அடுப்புப் பற்ற வைக்கிறார்கள். மித வெந்நீரில் குளித்துக் குளித்து வெளுத்துப் போனது பெண்ணின் உடல். ராணிகள் கழித்துப் போடும் மயிரைப் பார்த்தபடி உட்கார்ந்திருக்கிறார்கள்.

என்னால் இதையெல்லாம் தாங்க முடியவில்லை. இதில் எதுவுமே உண்மையாக இருக்க முடியாது என்றே முடிவு கொண்டேன். நான் என் மூதாதையர் பற்றித் தெரிந்துகொண்டு திரும்பும்போது இன்னொரு அறையிலும் ஆள் இருப்பது போலச் சாயை ஊர்ந்தது. நான் அந்த அறை வாசலுக்குப் போனேன். என் அலுவலகத்தில் வேலை பார்க்கும் பெண் எனக்கு முதுகைக் காட்டியபடி உட்கார்ந்திருக்கிறாள். அவள் முன் ஏராளமான ஆவணங்கள். தட்டை வரிகள், கறுப்பும் பச்சையும் கலந்த மசியில் எழுதப்பட்ட கடிதங்கள். அவள் பின்னிருந்து பார்த்தேன்; அவள் காலாட்படைகள் பற்றிய ஆவணங்களை ஒழித்துக்கொண்டிருந்தாள்.

நான் பார்த்தது நிஜம். சிறு புல் அளவில் காலாட்படை வீரர்கள் அந்த ஆவண எழுத்துக்களிலிருந்து குதித்துக் கீழே இறங்கிக் கொண்டிருந்தார்கள். சாய்வு எழுத்துகளில் இருக்கும் கோடு போன்ற உடல், அநேகமாக ஆயிரக்கணக்கான காலாட்படை வீரர்கள். கறுப்பு மழை எறும்புகளையும் விட சிறிய உருவம். வார்த்தைகளிலிருந்து உதிர்கின்றன. அவளைச் சுற்றி நின்று கொண்டுள்ளன. சில உருக்கள் கோடுகளை உடைத்து வெளியே வருகின்றன. கொம்பு எழுத்துகளின் அடிப்பகுதியைக் கிழித்து சில உருக்கள் விழுந்தன. பல ஆயிரம் வருடங்களாக நடந்து நடந்து ஓய்ந்து, சண்டையிட்டுச் செத்தவர்கள். அந்த உருக்களை எல்லாம் அந்தப் பெண் கரையான்கள் என நினைக்கிறாளோ என சந்தேகமாக வந்தது. நான் அந்தப் பெண் அருகில் உட்கார்ந்து பார்த்தேன். சிறு சிறு உருக்கள், கவச உடைகள். தலைக் கவசம், சிறு ஈட்டிகள், லட்சியமற்று இங்கும் அங்கும் ஓடித் திரிந்தன.

அந்தப் பெண் என்னைப் பார்த்ததும் திடுக்கிட்டுப்போனாள். என்ன? என்ன? என்பது போலப் பார்த்தாள். நான் அவளிடம் சொன்னேன்.

'காலாட்படைகள்...'

அவள் சொன்னாள்.

'தெரியும்... இவர்களை நான்தான் விழிக்கச் செய்தேன்'

'எதற்கு'

'சிலரைப் பற்றி எனக்குத் தெரிய வேண்டும்.'

'யார் அவர்கள்?'

'உன்னிடம் விளக்கப் போவதில்லை... இந்தக் காலாட் படைகளிடம் கேட்கப் போகிறேன் அதை.'

காலாட்படைகளை அவள் அதட்டி நிறுத்தினாள். சில முன்னும் பின்னும் ஓடிக்கொண்டிருந்தன. அவள் அவர்களின் முகத்தைப் பார்த்தாள். சிறு புள்ளி போல முகம். அவள் அரட்டிக் கேட்டாள்.

''நீங்கள் தூக்கிப் போன பெண்கள் எங்கே.''

''எப்போது''

''எல்லாக் காலத்திலும்தான்...''

''அரசர்களிடம் இருக்கக் கூடும்.''

'எங்கே உன் முட்டாள் ராஜாக்கள்... கூப்பிடு.'

காலாட்படைகள் உள்ளே ஓடின. அவள் முன்யோசிக்காத உருவில் ராஜாக்கள் தோன்றினார்கள். பாவாடை போன்ற ஆடைகளும், கொழுத்த கன்னங்களும், பெரிய மூக்கும் அசிங்கம் ததும்புகிறது. கையசைத்துக் காதல் கீதம் பாடுகிறார்கள்.

அவள் அவர்களைச் சொல்லிச் சப்தமிடுகிறாள். என்னால் இதைப் பார்த்துக்கொண்டிருக்க முடியாது. நான் ராஜாக்களை விரட்டி அடித்தேன். அந்தப் பெண் விசும்பியபடி சுருண்டு கொண்டாள். நான் காலாட்படையிடம் கேட்டேன்.

'எங்கிருந்து வருகிறீர்கள்.'

'பக்கங்களிலிருந்து, வாயிலிருந்து...'

இதை நம்ப முடியாதபடி நின்றேன். காலாட்படைகள் அறை சுற்றி வந்தன. அறைச் சுவரில் இருந்த ராட்சசச் சிலந்தியை எதிர்த்து ஈட்டி விட்டுக் கொண்டிருந்தார்கள் பல வீரர்கள். நடக்க நடக்க அவர்களுக்கு அறை பெரியதாகியபடியே இருந்தது. நடக்க முடியாமல் சுருண்டார்கள், அறையில் கிடக்கும் காலியான நாற்காலியில் திரிகிறார்கள்.

எனைத் தாண்டிப் போய்த் தேடுவது போலப் போனார்கள். மங்கிய ஆவண அறையில் அவர்கள் நடப்பது விந்தையாக இருந்தது. அவர்கள் எல்லா காலத்தைப் பற்றியும் தெரிந்து வைத்துக்கொண்டு சாவகாசமாக உலவும் ஆட்கள் போல நடந்து கொண்டார்கள்.

சில மணி நேரத்துக்குள் ஆயிரக்கணக்கான உருக்கள் அலையத் தொடங்கின. எல்லா ஆவணங்களையும் புரட்டித் தள்ளு கிறார்கள். எனைச் சுற்றித் திரிகிறார்கள். நான் அவர்களில் சிலரை அள்ளி காலியாக இருந்த மை பாட்டிலில் போட்டு எடுத்துக் கொண்டு என் மேஜைக்கு வந்தேன். இரவு விடியும் தறுவாயில் இருந்தது. கண்ணாடியை அவர்கள் இடித்துக்கொண்டிருந் தார்கள். மற்ற உருக்கள் வெளியே வருவதற்கு முன் நான் அந்தப் பெண்ணை வெளியே இழுத்து அறைக் கதவைப் பூட்டினேன்.

என் மேஜையிலிருந்த காலாட்படை வீரர்களை வெளியே எடுத்துவிட்டு எப்போதோ படித்த திப்புவின் குரலில் கத்தினேன். அவசரமாக அவர்கள் வரிசைக்கு வந்தார்கள். அவர்களைச் சுற்றிச் சுற்றிப் பார்த்தேன். சிறு அசைவு கூட அவர்களிடம் இல்லை. விரலை உயர்த்தியதும் அவர்கள் சப்தமிட்டார்கள்.

'திப்பு மஹாராஜா...'

'திப்பு மஹாராஜா... ஜே...'

காலாட்படையினைத் தனித் தனியாகப் பிரித்ததும் அவை தானாக மேஜை விளிம்புகளில் போய் காவல் நின்றுகொண்டன. சில தனியாக நின்றன. தனியாக நின்றவை எனை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. நான் அவைகளைக் கூர்மையாகப் பார்த்தேன். எனக்குத் தலை வணங்காத அந்த உருவைப் பார்த்துக் கேட்டேன்.

‘எத்தனைத் தலைகளை வீழ்த்தினாய் நீ...’

அவை பதில் பேசவில்லை.

‘எங்கேயிருக்கின்றன அறுபட்ட தலைகள்’

சிரிக்கும் சப்தம் கேட்டது. மேஜை விளிம்பிலிருந்து வந்திருக்க வேண்டும். நான் சிரிக்கும் பக்கமாகத் திரும்பிக் கேட்டேன்.

‘எதற்குச் சிரிப்பு’

‘நாங்கள் சமையற்கட்டைக் காவல் காத்த படைகள்.’

வேறு யாரோ சிரிப்பது கேட்டது.

‘என்ன...?’

‘உன் தாத்தா... ராணிக்கு வெந்நீர் போட்டவர்.’

‘நீ பார்த்தாயா...’

‘பின்னே...’

காலாட்படைகள் என்னை ஏளனம் செய்யத் தொடங்கின. அருகில் வந்து குதித்தன. நான் திப்புவின் குரலில் விரட்டினேன். அவை குதித்துக் கூச்சலிட்டன. என் ஆத்திரத்தில் அவைகளை நசுக்க ஓடினேன். அவைகள் சப்தமிட்டுச் சிரித்தன.

‘நாங்கள் ஏற்கெனவே இறந்தவர்கள்...’

எனக்கு எதுவுமே புரியவில்லை. குழப்பத்தின் சூழலில் சிக்கிக் கொண்டிருந்தபோது அந்த வீரர்கள் என் முன்னே இரைந்து கத்தினார்கள்.

‘உயிருள்ளவர்கள் இறந்தவர்களைக் கொல்ல முடியாது’ நான் அவர்களைப் பார்த்துச் சொன்னேன்.

‘நீங்களெல்லாம் யாராம்... வரலாற்றில் காலாட்படைகள் என்பது எல்லாம்... ராணிக்கு வெந்நீர் போட்டவர்கள்தாம்.’

அவர்கள் இதை எதிர்பார்க்கவில்லை. இதில் அவர்கள் உண்மையின் ஏதாவது ஒரு முகத்திருப்பத்தைக் கண்டிருக்கக் கூடும். மவுனமுற்றார்கள். அதன் பிறகு பல நாள்கள், வருடங்கள் அவர்கள் என்னோடு அதே ஆவணக் காப்பகத்தில் இருந்தார்கள்.

பொருள்களைத் திருடிக்கொண்டு போனார்கள். சாப்பாட்டுக் கேரியரில் ஒட்டிக்கொண்டு வந்து வீட்டின் அலமாரி, புத்தகங்களுக்குள் ஒளிந்துகொண்டார்கள். எனைப் பார்க்கும் போது எல்லாம் கிண்டலடித்தார்கள்.

என்னால் அவர்களின் கிண்டலைப் பொறுத்துக்கொள்ள இயல வில்லை. வயதும் அதிகமாகிக்கொண்டே போனது. கோபம் எடுத்ததற்கெல்லாம் வருகிறது. அலுவலக அறையின் டைப் ரைட்டர் எழுத்தில் ஏறி நின்றுகொண்டு பல வீரர்கள் குதித்தார்கள். எழுத்துகள் பேப்பரில் பதிவாகின. டைப்ரைட்டர் ரிப்பனில் ஏறிப் போனார்கள். அவர்கள் அந்த ஆவணக் காப்பகத்திலிருந்து பல ரகசிய விவரங்களை இழுத்து வந்து என்னிடம் போட்டார்கள். ராபர்ட் கிளைவ் கப்பலில் வரும் போது எழுதிய குறிப்புகள் பல நகரங்களைப் பற்றிய குறிப்புகள். மன்னர்களுக்கு நடந்த கல்யாண விவரங்கள். பிளேக்கால் இறந்துபோன ஆட்கள் பற்றிய விவரங்கள். கிறிஸ்துவப் பாதிரிகளின் பிரசங்க நோட்டுகள். சுவிசேஷப் பாடல்கள். காலாட்படைகள் எனைப் பார்த்துக் கிண்டல் அடித்தன.

ஒரு இரவில் காலாட்படைகள் எனை இதுவரை திறக்காமலே கிடந்த மூலை அறைக்கு இழுத்துக்கொண்டு போயின. அந்த அறையில் வெள்ளையாக ஒரு உரு தொங்கிக்கொண்டிருந்தது. அதன் முன்னே பல்லாயிரம் கட்டம் கொண்ட பலகை. காவல் வீரர்கள் எனை அந்த அறைக்குள் தள்ளிப் பூட்டி ஓடினார்கள். வெள்ளை உரு திரும்பிக் கேட்டது.

'விளையாடத்தானே வந்தாய்.'

எனக்குப் புரியவில்லை. நான் அந்த அறையைப் பார்த்தேன். ஆவணங்கள் நொறுங்கி செதில் செதிலாகப் போயிருந்தன. எழுத்துகள் தூசிகள் போலாகிச் சுவரில் ஒட்டிக்கொண்டிருந்தன. என் குரல் வெளிவந்தது.

''யார்... நீ... நீ...''

'அரசாங்கக் காப்பகங்களில் இருக்கும் வெள்ளை வேதாளம்'

'என்ன விளையாட்டு...'

'உன் மூதாதையரை விடுவிக்கும் விளையாட்டு. வா...' அது ஒரு சுழலும் பலகை. வரிசை வரிசையாகக் கட்டங்கள். ஒவ்வொரு

கட்டத்திலும் ஒரு கூட்டம். ஆண் பெண் உருக்கள். என் முன் சுழன்ற பலகையில் என் மூதாதையர் கட்டம் கட்டமாக நின்றார்கள். எனைப் போலவே உருக் கொண்டவர்கள். பெரிய பெரிய ஆகிருதிகள். முகச்சாயல், கண்கள் எனைப் போலவே. எனைப் பார்த்துக் கெஞ்சி அழுகிறார்கள். நான் பல தலை முறைகளைப் பார்த்தேன். என் எதிரேயிருந்த சுழல் பலகை சுற்றத் தொடங்கியது. வெள்ளை வேதாளம் எனை ஒரு கேள்வி கேட்டது.

'சரியான எண்ணைச் சொன்னால்... அவர்கள் விடுதலை. தவறினால், நீயும் மாட்டிக்கொள்வாய்.' சுழலும் பலகையி லிருந்து குரல்கள் சுழன்றன. எண்கள் ஓடின. சுழலும் எண்கள். பலகை முடியும் முன்பே எண்களைச் சொன்னேன். சுழல் குறி, நான் சொன்ன எண்ணில் நின்றது. அடுத்த ஆட்டத்தின் முன் ஓடி வெளியேறினேன். வெள்ளை வேதாளம் எனை விரட்டி அடுத்த அறை வந்தது. அலுவலகம் விட்டே விரைந்து ஓடினேன்.

காலாட்படை வீரர்கள் சிரித்தார்கள். அரசர்கள் வாங்கிய கடன் பட்டியல் பத்திரத்தில் என் அலுவலகக் கணக்கை இந்த வீரர்கள் எழுதிவிட்டார்கள். தூக்கு விதிக்கப்பட்ட கைதியின் கடைசி ஆசை ஓலையில் என் பெயர் உள்ள முத்திரையைப் பதிக்கி றார்கள். அவர்களின் வார்த்தை, குரல் எதுவும் எனக்குப் பிடிப்ப தில்லை. இரண்டு, மூன்று தினம் நான் அலுவலகம் வராமலே இருந்தேன். என் அறையிலே பகல் எல்லாம் கிடந்தேன். சிகரெட் புகைக்கக் கூட முடியவில்லை என் வெளுத்த உரு கண்டு பிள்ளைகள் பயந்தன. இரவில் மனைவி கூடக் கேட்கிறாள்.

''தூக்கத்திலே ஏதேதோ உளர்றீங்க...''

நான் அலுவலகம் போனதும் காலாட்படைகள் வந்து கண்ணடிக் கின்றன. ஒன்று இரண்டல்ல... ஏராளம். அந்த அலுவலகப் பெண் இப்போது வரவில்லை. பிரசவிக்க லீவு கேட்டுப் போய்விட்டாள். காலாட்படை வீரர்கள் என் முன் கேள்விகள், பதில்கள் என விளையாடுகிறார்கள்.

சம்பங்கி ராணியின் எட்டுக் குழந்தைகளுக்குக் கால் கழுவி விடும் ஆட்கள் யாரு?

இவன் முன்னோர்கள்.

திப்புவின் தொப்பிக்குக் கோழி இறகு வைப்பது யாரு?

இவன் முன்னோர்கள்.

ராஜா பல்லக்கில் தேளைப் போட்டது யாரு?

இவன் முன்னோர்கள்.

சக துரோகி யாரு?

இவன் முன்னோர்கள்.

என் முன்னோர்களைக் கண்டு நான் ஓட வேண்டியதாகியது. காலாட்படை வீரர்கள் எனை மிரட்டி வருகிறார்கள். என் தலையைப் பிடுங்கிப் போகப் போவதாக பயமுறுத்துகிறார்கள். நான் காலாட்படை வீரர்கள் சென்ற பாதைகள், வீர சாகசம் பற்றிப் பேசிப் பேசி நைச்சியம் செய்ய முயன்று தோல்வி கண்டேன்.

வர வர அவர்கள் எதைக் கொண்டு போனாலும் திருடிப் போய் விடுகிறார்கள். பேனாக்கள், சில்லறைகள், தண்ணீர்ப் புட்டிகள் எல்லாம் திருடு போய் விடுகின்றன. இவர்கள் தொல்லை போதா தென்று பழைய ராஜாக்கள் வேறு கத்தித் தொலைக்கிறார்கள். ஆங்கிலத்தில் பிரபுக்கள் அரட்டுகிறார்கள். என் புத்தி கழன்று பல பக்கங்களிலும் தானாகச் சுழல்கிறது. வீட்டில் கூட நான் காலாட்படை என உளறினேன். மழைக்காலம் வந்தால் அவர்கள் பெருகி விடுகிறார்கள். என்னால் எதுவுமே செய்ய முடிவ தில்லை. என் மேஜை நிறைய அவர்கள் உட்கார்ந்திருக்கிறார்கள். கவசங்களைக் காய வைக்கிறார்கள். பாசி படர்ந்த கவசங்களைக் காட்டிக்கொண்டு நிற்கிறார்கள். எனக்கு வரும் கடிதங்களைச் சிதைத்து விட்டார்கள். எந்தக் கட்டளைக்கும் கட்டுப்படாமல் திரிகிறார்கள். நான் இதைப் பலரிடம் சொல்லியாகிவிட்டது. சக அதிகாரிகள். நண்பர்கள் சிரிக்கிறார்கள். காலாட்படைகள் என்னிடம் சொல்கின்றன.

''வெளியாளைக் கூட்டி வந்தால்... உன் பூர்வீக வரலாற்றைச் சொல்லி விடுவோம். வெந்நீர் அடுப்புக் கதை வெளியே வரும்...''

நான் என்ன செய்வது. மனைவியிடம் பல முறை சொல்லி விட்டேன். அவள் அலுக்காமல் சொல்கிறாள்.

'கொஞ்ச பேரை இங்க எங்கிட்ட கொண்டு வந்து விடுங்க. வேலைக்கு ஆகும்.'

காலாட்படைகள் காலையில் அணிவகுத்து அலைகின்றன. லெப்ட் ரைட், லெப்ட் ரைட், லெப்ட் ரைட். மெழுகுத் தலை கொண்ட பொம்மை போல என் உடல் கரைகிறது. நேற்று என் கண்ணாடியைத் திருடிப் போய் ஔரங்கசீப்புக்குக் கொடுத்து விட்டார்கள். நான் அவரிடமிருந்து எப்படி வாங்க முடியும் அதை. அதைக் காலாட் படையை ஏவி அவன் என்னைக் கொல்லச் செய்தால்... என்னால் எதுவும் இயலவில்லை. குற்றங்கள் பெருகத் தொடங்கிவிட்டன. இந்தக் காலாட் படைகளை என்னால் சகிக்க முடியாது.

யாராவது இவற்றை விசாரித்துத் தண்டனை வழங்குங்களேன்.

இதை நான் இந்திய உயர் நீதிமன்றம், ஆறாம் லூயி, வில்லியம் II, மன்னர் சூயி, ஜார்ஜ் IV இவற்றில் யாருக்காவது அனுப்பலாமா?

சொல்லுங்கள்...

இந்தக் குற்றப் பத்திரிகையை எங்கே நான் தாக்கல் செய்வது...

இதை எழுதும் பேனா முனையில் கூட இரண்டு வீரர்கள் நின்று எழுத்தை எட்டிப் பார்க்கிறார்கள். நிஜம்.

என்னை விட்டுவிடச் சொல்லுங்கள். எனக்கு ஆவணங்கள் வேண்டாம்...

***சுபமங்களா, செப்டம்பர் 1992***